ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# கீதா
# வ்யாக்யானம்

(முதல் ஆறு அத்தியாயங்கள்)

[பகவத்கீதையும், அதற்கு ஸ்ரீராமாநுஜ பாஷ்யமும், ஆளவந்தார் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹமும் வாதிகேஸரி ஜீயர் அருளிய பகவத்கீதை வெண்பாவும், ஸ்ரீவேதாந்ததேசிகர் அருளிய கீதார்த்தஸங்க்ரஹமும் 'ஸுதர்சனம்' ஆசிரியர் இயற்றிய கீதார்த்தவிவரணம் என்னும் தமிழ் வ்யாக்யானமும்; கீதாஸ்லோகார்த்தச் சுருக்கமும் அடங்கியது.]

கிடைக்குமிடம் —

ஸ்ரீ உ. வே.

**S கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**

அட்வகேட்

'ஸுதர்சனம்' ஆசிரியர்

3 புத்தூர் அக்ரஹாரம் திருச்சி 17

விலை ரூ 10-00 தபாற்கூலி 1-50

பத்ரிவிலாஸம் பிரஸ் புத்தூர் அக்ரஹாரம் திருச்சி 17



## கீ$_3$தையைப்பற்றி ரிஷி வாக்கு

ஸர்வோபநிஷதோ$_3$ கா$_3$வ:
தோ$_3$க்$_3$தா$_4$ கோ$_3$பாலநந்த$_3$ந: ।
பார்த்தோ$_2$ வத்ஸ: ஸுதீ$_4$ர் போ$_4$க்தா
து$_3$க்$_3$த$_4$ம் கீ$_3$தாம்ருதம் மஹத் ॥

*[எல்லா உபனிஷத்துக்களுமே பசுக்களாகும். அவற்றை கறப்பவன் ஆய்ப்பிள்ளையான கண்ணன். அர்ஜுனனாகிய கன்றிருப்பவன். ஞானியே அப்பாலைப் பருகுமவன். மி சிறந்த கீ$_3$தையாகிற அமுதமே பாலாகும்.]*



## கீதையைப்பற்றித் திருமழிசைப்பிரான்

சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்
ஆயன் துவரைக்கோனாய்நின்ற—மாயன் அன்(று)
ஓதிய வாக்கதனைக் கல்லார் உலகத்தில்
ஏதிலராம் மெய்ஞ்ஞான மில்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கீதா வ்யாக்யானம்

## முன்னுரை

[ஸ்ரீ உ. வே. வாகம்ருதவர்ஷீ
வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி]

"அஜாயமாந: பஹுதா விஜாயதே" என்கிறபடியே, கர்மவஶ்யனன்றிக்கே க்ருபாபரவஶனாய் எம்பெருமான் பல படிகளாக அவதரிக்கிறான் என்பர் பெரியோர். பகவதவதாரங்களுள் ஸ்ரீக்ருஷ்ணாவதாரம் பரமப்ரதாநமாகும். மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து மாதவனே கண்ணுற நிற்கிலும் காண கில்லா உலகோர்க்கு, ஓர் சேமவைப்பாக கீதாஶாஸ்த்ரத்தை அருளிச்செய்தது ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தின் தனிச்சிறப்பாகும். ஸ்ரீராமாவதாரத்தில் "மித்ர பாவேந" "ஸக்ருதேவ" இத்யாதியான அவன் வாக்யங்கள் நாலிரண்டு காணக்கிடைக்குமாயினும், பரமவேதாந்த ஸாரார்த்த கர்ப்பிதமானதோர் திவ்யஶாஸ்த்ரம் ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்திலேயே அவதரித்தது.

"ஸர்வஸ்ய வஶீ—ஸர்வஸ்ய ஈஶாந:" "வஷட்கார:" "ஹ்ருஷீகேஶ:" என்று எழுலகும் தனிக்கோல் செலுத்தும் ஸர்வநியந்தாவாகக் கொண்டாடப்படும் ஸர்வேஶ்வரனுக்கு, யுத்தத்தில் நாட்டமில்லாத அர்ஜுநனை யுத்தத்தில் விருப்பம் உள்ளவனாக ஆக்குவது ஓர் அரிய பெரிய செயல் அன்று. ஸங்கல்பமாத்ரத்தால் செய்ய வல்லவனே. ஆயினும் அர்ஜுநனை வ்யாஜமாகக்கொண்டு, உலகத்தார்க்கு ஆத்மக்ஷேமங்கரமான ஶாஸ்த்ரத்தை வெளியிடத் திருவுள்ளம்பற்றியே அர்ஜுநனை "ந யோத்ஸ்யே" என்ற ஸங்கல்பம் மாறுதலாக ஸங்கல்பித்தது. கீதை கேட்ட பிறகன்றோ "ஸ்திதோஸ்மி—கரிஷ்யே வசநம் தவ" என்றான். ஸ்ரீராமாவதாரகாலத்தில் பகவான் தூயசிந்தையளான கைகேயியின் உள்ளத்தைக் கலக்கியது ஸ்வகல்யாண குண ப்ரகாஶநத்திற்காக—என்பர் பெரியோர். "ராமே வா

ஷ்யா ஸிமந்யை: பாரஸ்பர ஸங்க்ரஹை: | யா ஸ்வயம் பத்ம நாபஸ்ய முகபத்மாத் விநிஸ்ஸ்ருதா ||" "யஸ்மிந் ப்ரஸாத ஸுமுகே கவயோபி யே ஸை ஸாஸ்த்ராண்யஸாஸு: இஹ தாப்யஹ்யப்ரயாணி | க்லேஷேண நந்த தபஹ ஸ்வய ஸேயா கீதம். ஸாஸ்த்ரஸ்ய தஸ்ய ஸத்யநாம் ஸமீஹா ஸாஸ்த்ராஸ்த்ரர் ||" என்னுமிவையாதிகளிலே கீதாவைபவம் ஸுப்ரஸித்தம். நாராயணோபாஸகராமான ஸ்ரீ வேத வ்யாஸர் தம்முடைய ப்ரஹ்ம ஸூத்ரங்களிலே "ஸ்ம்ருதேச்ச" (1-2-6) என்றும். "ஸ்மரந்தி ச" (4-1-10) என்றும் கீதையை ஸாக்ஷாத் ப்ரமாணமாக காட்டியருளி னாரிறே.

"பார்த்தம் ப்ரபந்நார்த்தஸ்ய ஸாஸ்த்ராவதரணம் க்ருதம்" என்றருளிச்செய்தார் ஆளவந்தார். "உத்திஸ்ய" என்றது "வ்யாஜீக்ருத்ய" என்றபடி. ஆளவந்தார் இப்படி அருளிச்செய்கைக்கடி ஆழ்வார் திருவாக்கிறே. "அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி" என்கிற ஆழ்வார் திருவாக்கு. நாட்டார் அந்நபாநாதிகளெல்லாவற்றிலும் கார்யம் உடையராயிருப்பார்களிறே. அறிவொன்றிலுமாய்த்து குறைவுபட அறியாதது. அறிவினால் குறைவுபட அறியாத; அறிவால் கார்யமின்றிக்கேயிருப்பாராயிற்று. ஸாஸ்த்ரார்த்தஜ்ஞாநமின்றிக்கே. அறிவில்லாமையைப் பற்றிக் குறைவுமின்றிக்கே இருக்கும் ஸம்ஸாரிகள் என்றபடி. ப்ராப்தரான இவர்கள் படும் அநர்த்தத்தைக் கண்டு ஆற்றாமையாலும், மிக்க க்ருபையாலுமிறே. பகவான் கீதோபதேசம் பண்ணியருளிற்று. இவன் உபதேசத்துக்கு ஆஸ்ரித வ்யாமோஹமும் ஓர் காரணமாகும். "அர்ஜுநனுக்கு தூத்யஸாரத்யங்கள் பண்ணிற்றும், ப்ரபத்யுபதேசம் பண்ணிற்றும் இவனுக்காக" என்கிற பிள்ளை உலகாரியன் திருவாக்கு. "மால் என்கோ" என்றருளிச் செய்தார் ஆழ்வார்.

(மால் என்கோ) இப்பாசுரத்தை (சரமச்லோகத்தை)ச் சொல்லா. "இத₃ம் தே நாதபஸ்காய" என்னும் வ்யாமுக்₃த₄ன் என்பேனோ? "இத₃ம் து தே கு₃ஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி" என்றவோபாதி, "இத₃ம் தே நாதபஸ்காய" என்றதுவும் முன்னே சொல்லிக்கொள்ளவிறே அடுப்பது. அங்ஙனன்றிக்கே, மூன்றுறச் சொல்லி, பின்னை, "இத₃ம் தே நாதபஸ்காய" என்றாலிறே. இதுகளுக்கு அடிப்பென்? என்று சீயர் பட்டரைக்கேட்க, "த்₃ரௌபதி₃ ஸமூஹமாகக் துக்கிடக்கையாலே, அது முடிக்கைக்காக செய்வகர்யானமை யாலே மூலையில் கிடந்தாரை முற்றத்தேயிட்டான். பின்னை அர்த்த₂த்தின் சீர்மையை அநுஸந்தி₄யா, 'ஆர் அதி₄காரிகளாகச் சொன்னோம்? கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே யிட்டோம்' என்று பதண் பதண் என்றான் காணும்'" என்றருளிச்செய்தார் — என்ற ஈட்டு தி₃வ்யவசனங்கள் இங்கே அநுஸந்தே₄யங்கள். "உபநிஷத்₃முத₃ராம் உப₃லமங் க்வாபி லக்ஷ்யே. ஶரணமுபக₃தாந் நஸ் த்ராயதே ஶார்ங்க₃த₄ந்வா" என்றாரின்றிறே.

இனி கீ₃தாப்ரமேயத்தை அநுப₄விப்போம். "தத்வ ஜ்ஞாநாந் மோக்ஷலாப₄: அஜ்ஞாநாத் ஸம்ஸார:" என்பர் பெரியோர். மோக்ஷப்ரயோஜநதத்வஜ்ஞாந ஜநக ஶாஸ்த்ரம உபநிஷத், கீ₃தை, ப்₃ரஹ்மஸூத்ரம் என மூவகைப்படும். உபநிஷத் வேத₃வாக்யம், கீ₃தை வேத்₃யவாக்யம், ப்₃ரஹ்ம ஸூத்ரம் வைதி₃கவாக்யம். இம்மூன்று ப்ரமாணங்களைக் கொண்டே வைதி₃கர்கள் தத்வஹிதபுருஷார்த்த₂நிர்ணயம் செய்கிறார்கள். "நாதே₂ாபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் ப₃ஹு பி₄ருபசிதம் யாமுநேய ப்ரப₃ந்தை₄:. த்ராதம் ஸம்யக் யதீந்த்₃ரை: இத₃ம் அகி₂லதம:கர்ஶநம் த₃ர்ஶநம் ந:" என்றும், "எம்பெருமானார் தரிசனம் என்றே இதற்கு நம் பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார். அப்புவியோர் இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த அந்தச் செயல அறிகைக்கா" என்றும் இத்யாதி₃ப்படியே ப்ரஸித்₃த₄

மான எம்பெருமானார் தூ3ர்ஸாநீதியில் தத்வாதி4க்யகர்யை யிருக்கும்படி எங்ஙனேயென்னில்:— “தத்வம் ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபி4: ஸர்வதோமுகை2: | தத்வமேகோ மஹாயோகீ3 ஹரிர் நாராயண: ஸ்ம்ருத: ||” என்றும், “ஆலோட்3ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந: | இத3மேகம் ஸுநிஷ்பந்நம் த்4யேயோ நாராயணஸ் ஸதா3 ||” என்றும் இத்யாதி3ப்படியே ஸகலஶாஸ்த்ரஸாரமாயும் ஜ்ஞாநபரமாயுமிறே மோக்ஷஶாஸ்த்ரங்களிருப்பது. பரப்3ரஹ்மஶப்3த3வாச்யனான நாராயணனே பரதத்வம் என்றும், ப்ர ஸாத3விஶிஷ்டனான அவனே பரமஹிதம் என்றும், போ4க்3யதாவிஶிஷ்டனான அவனே பரமப்ராப்யம் என்றுமிறே வேதா3ந்த ஸாரார்த்த2ம். இவ்வர்த்த2ங்களையே ப4க3வான் கீ3தையிலே உபதே3ஶிக்கிறான்.

“ஶாஸ்த்ராரம்ப4ம் சதுஸ்ஸூத்ரீ அதோ4டயத்” என்கிற படியே, ஶாரீரகமீமாம்ஸா ஶாஸ்த்ரத்தில் முதல் நான்கு ஸூத்ரங்கள் உபோத்3கா4தமானப்போலே, கீ3தையிலே முதல் அத்4யாயமும், இரண்டாம் அத்4யாயத்தில் பதினொரு ஶ்லோகங்களுமே உபோத்3கா4தமாகும். “ந த்வேவாஹம்” (2-12) முதலாக, “ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய” (18-66) ஈறாக கீ3தாஶாஸ்த்ரம் என்பர் நம் பெரியோர். ஆக, த்3விதீயாத்4யாயைகதே3ஶமும் உபோத்3கா4தம் என்றதாய்த்து. ஆகையாலிறே, கீ3தார்த்த2ஸங்க்3ரஹத்தில் ஆளவந்தார், அத்4யாயார்த்த2 ஸங்க்3ரஹ ஶ்லோகங்களில் “த்3விதீயே” “த்ருதீயே” “சதுர்த்தா2த்4யாயே” என்றருளிச்செய்தவர், “அஸ்தா2ந” என்கிற ஶ்லோகத்தில் “ப்ரத2மாத்4யாயே” என்றருளிச்செய்யாதிருந்தது. ஆக, “அஶோச்யாந்” (2-11) என்ற ஶ்லோகம் முடிவாக கீ3தோபோத்3கா4தம் என்றதாயிற்று.

## நாராயணனே கீ3தாப்ரதிபாத்3ய பரதத்வம்

“நாராயண பரம் ப்3ரஹ்ம” என்று அவிப4க்திக நாராயணநுவாக வாக்யத்தில் நாராயணபத3த்தை விஸர்கா3ந்த

என்றிறே கீ3தாஶாஸ்த்ராரம்ப4ஶ்லோகம். இது ஜீவபர பே4த3 ப்ரதிபாத3க ஶ்லோகமாகும். இங்கு ஶ்லோகத்தில "அஹம்" என்று தன்னையும், "த்வம்" என்று புரஸ்ஸ்தி2தனான அர்ஜுநனையும் பிரித்துச்சொல்லுகையால் ஜீவபரபே4த3மும், "த்வம்" என்று அர்ஜுநனையும், "இமே" என்று அரசர்களையும் பிரித்துச்சொல்லுகையால் ஆத்மாக்களுள் பரஸ்பரம் பே4த3மும் உக்தமாயிற்று. இங்கே உக்தமான பே4த3ம் பாரமார்த்தி2கமே. அவித்3யா கல்பிதமன்று என்ற இவ்விஷயத்தை "ஜ்ஞாநேந து தத் அஜ்ஞாநம் யேஷாம் நாஶிதம் ஆத்மந:। தேஷாம் ஆதி3த்யவத் ஜ்ஞாநம் ப்ரகாஶயதி தத்பரம்॥" [5-16] என்று கீ3தாசார்யன் மூதலித்துக் காட்டுகிறான். "அஜ்ஞாநத்தாலே கல்பிதம் பே4த3ம். அஜ்ஞாநமாகிற காரணம் நஶித்தவாறே பே4த3மான கார்யம் நஶிக்கும்" என்கிற அத்3வைதிகளின் மதம். அஜ்ஞாநம் நீங்கியவர்களை "தேஷாம்" [5-16] என்று ப3ஹுவசநாந்த தச்ச2ப்3த3த்தாலே நிர்தே3ஶித்த கீ3தாசார்யனுக்குத் திருவுள்ளம் "பே4த3ம் பாரமார்த்தி2கம்" என்பதே என்று தெளிவாக விளங்குகிறது. "யோ மாம் அஜமநாதி3ம் ச வேத்தி லோகமஹேஶ்வரம்। அஸம்மூட4: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே॥" [10-3] என்றும். "யோ மாம் ஏவம் அஸம்மூட4: ஜாநாதி புருஷோத்தமம்। ஸ ஸர்வவித் ப4ஜதி மாம் ஸர்வ பா4வேந பா4ரத॥" [15-19] என்றும் கீ3தையிலே ப4க3வான். பே4த3ஜ்ஞாநமுடையவனையிறே "அஸம்மூட4ன்" என்று கொண்டாடியுள்ளான். பே4த3ஜ்ஞாநம் ஸம்மோஹமிறே ம்ருஷாவாதி3மதத்தில். அதனையடியறுக்கும் வாக்யமிறே "மாயன் அன்றோதிய வாக்கு.

ஜக3த்3ப்3ரஹ்மபே4தா3விருத்3த4மான அத்3வைதம் கீ3தையில் கூறப்பட்டுள்ளதை இனி நாம் அநுப4விப்போம். வேதா3ந்த ஸித்3த4மான அத்3வைதம் இருவகைப்படும்-ஜீவாத்3வைதம் என்றும் ப்3ரஹ்மாத்3வைதம் என்றும்.

இவை தன்னையே முறையே ப்ரகாராத்3வைதம் என்றும் ப்ரகார்யத்3வைதம் என்றும் கூறுவர் நம் பெரியோர். புராணரத்நமாகிய ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில், ஆதி3ப4ரத சதுஃஶ்லோகியால் ஜீவாத்3வைதத்தையும், ஸ்ரீ வராஹஸ்துதி யான மஹர்ஷி சதுஃஶ்லோகியால் ப்3ரஹ்மாத்3வைதத்தை யும் வெளியிட்டார் ஸ்ரீபராஶர ப4க3வான். கீ3தாசார்யனும் இம்முறையிலே ஐந்தாம் அத்4யாயத்திலே "வித்3யாவிநய ஸம்பந்நே ப்3ராஹ்மணே க3வி ஹஸ்திநி। ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி3தா: ஸமத3ர்ஶிந:॥" என்று ஜீவாத்3வைதத்தையும், ஏழாம் அத்4யாயத்தில் "மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சித3ஸ்தி த4நஞ்ஜய" என்று ப்3ரஹ்மாத்3வைதத்தையும் உபதே3ஶித்தான். அதாவது:— எம்பெருமானார் த3ர்ஶநத்தில் ஜக3த்3ப்3ரஹ்மங்களுக்கு உள்ள ஸம்ப3ந்த4ம் ப்ரகார ப்ரகாரி பா4வமாகும். புருஷனுக்கு த3ண்ட3குண்ட3லாதி3கள் அஸியத ப்ரகாரங்கள். அங்ஙனன்றிக்கே, வஸ்த்ரத்துக்கு வெண்மைநிறம் போலேயும், வ்யக்திக்கு ஜாதிபோலேயும், ப்3ரஹ்மத்துக்கு ஜக3த் ஸியத ப்ரகாரமாகும். அப்ருத2க்ஸித்3த4விஶேஷணம் — விட்டுப் பிரியாத விஶேஷணம் என்றபடி. ப்ரகாரியான (விஶேஷ்யமான) ப்3ரஹ்மம் ஒன்றே தன்னையொழிந்த ஸர்வத்தை யும் ப்ரகாரமாகக் கொண்டது. அதுபோன்ற ஸர்வப்ரகாரி யான வஸ்த்வந்தரம் இல்லை என்றபடி. இதுவே ப்ரகாரி யத்3வைதம் அல்லது ப்3ரஹ்மாத்3வைதம் எனப்படுகிறது. ப்ரகாரிண: அத்3வைதம்—விஶிஷ்டஸ்ய அத்3வைதம்—ஸர்வ சேதநாசேதநவிஶிஷ்டஸ்ய அத்3வைதம் — அஶேஷசித3சித் ப்ரகாரஸ்ய ப்3ரஹ்மண: ஏகத்வம் என்றபடி. ஆகையாலே நம் மதம் விஶிஷ்டாத்3வைதம் எனப்படுகிறது. இது தன்னையே "பரமார்த்த2: த்வமேவைக: நாந்யோऽஸ்தி ஜக3த: பதே" என்று ஸ்ரீ விஷ்ணுபுராணமும், "மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சித3ஸ்தி" என்று கீ3தையும் கூறு கின்றன. ப்ரகாரப்ரகாரிகளுக்கு பரஸ்பரம் ஸ்வரூபத: பே4த3ம் இருந்தாலும். ஸர்வப்ரகாரவிஶிஷ்டமான ப்3ரஹ்ம

மம் ஒன்றே ப்ரகாரி என்றதாயிற்று; இதனால் ப்ரகாராந்தரத்வ நிஷேதமும் ஸித்திக்குமேயல்லது, ப்ரகாராந்தரத்வமும் [illegible] ஸித்தியாது. அங்ஙனமாயின் "ஜகத: பதி" என்ற வாக்யம் [illegible] அஸங்கதமாகும். கீதையில் "மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய" என்கிற வாக்யத்தில் "அன்ய" பதத்துக்கு வையர்த்யம் ப்ரஸங்கிக்கும். "மத்த: அன்யத் பரதரம் நாஸ்தி" என்றிறே அன்வயம். இதனால் ப்ரஹ்மம் ஸமாப்யதிக தரித்ரம் என்று பலிக்கும். "ஜகத: பதித்வதந்ய: ந" என்னும் வாக்யத்தாலும் [illegible] வந்தரநிஷேதமும் பலிக்குமேயல்லது, ப்ரகாராந்தரநிஷேதமும் பலியாது. "ஹே! பூபதே த்வதந்ய: ந" என்றால் உன்னுக்குத் துல்யனான மற்றொரு அரசன் இல்லை என்கிற ஸித்திக்குமேயல்லது. இவனுக்கே வ்யாப்தியான பூமி இல்லை என்று பலிக்காது. ஆக ஜகதேககாரணமாயும், ஜகதேகஶேஷியாயும், ஜகதேகப்ரகாரியாயும் உள்ளது ப்ரஹ்மம் ஒன்றே—மற்றொன்று இல்லை என்றதாயிற்று. இதுவே ப்ரகாரத்வைதமான ப்ரஹ்மாத்வைதம். இது ஜகத் ப்ரஹ்மங்களுக்குள்ள ஸ்வரூபபேதத்துக்கு அவிருத்தமாகும்.

இனி ப்ரகாராத்வைதமான ஜீவாத்வைதமாவது:— ஒரு க்ராமத்தில் உள்ள க்ருஹங்களில் உள்ள நெல், ஒரே ஜாதி என்றுகொண்டு, "ஒரே நெல்" என்று வ்யவஹரிக்கப்படுவதுபோல, ஸகல ஶரீரகர்களான ஜீவாத்மாக்கள் ஸ்வரூபத: பிந்நர்களாயினும், ஏகஜாதீயர்கள்—ஏகப்ரகார விஶிஷ்டர்கள் என்றுகொண்டு, ஏகஜீவவாதமான ஜீவாத்வைத வாதமும் ஸங்கதமாகும். இது ஜீவாத்மாக்களுக்குள்ள ஸ்வரூபபேதத்துக்கு அவிருத்தமாகும். அதாவது—"ஶரீரகதங்களான ப்ராஹ்மணத்வ அப்ராஹ்மணத்வரூப வைஷம்யமும், ஸ்த்ரீத்வபுருஷத்வரூபவைஷம்யமும், தேவத்வமநுஷ்யத்வரூபவைஷம்யமும், ஆத்மஸ்வரூபத்தில இல்லை. ஸகலாத்மாக்களும், நித்யத்வ அணுத்வ ஜ்ஞாந ஸ்வரூபத்வ ஜ்ஞாநகுணகத்வ பகவச்சேஷத்வரூபமான

அப்ருதக்ஸித்த விசேஷண விசேஷ்யங்களுக்கு ஸாமாநாதி கரண நிர்தேசம் முக்யம் என்றதாயிற்று. ஆக கீதையில் நாராயணனே பரதத்வமென்றும், ஸமாப்யதிக தரித்ரன் என்றும் நிரூபிதம் என்றதாயிற்று.

கீதார்த்தங்களில் மற்றும் சிலவற்றை இனியநுபவிப்போம். மூன்றும் அத்யாயத்தில், "மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்ய அத்யாத்மசேதஸா। நிராசீர் நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர:॥" (3-30) என்று த்ரிவித த்யாக விசிஷ்டகர்மாநுஷ்டானத்தை உபதேசித்து அது தன்னையே, பதினெட்டாம் அத்யாயத்தில் "த்யாகே ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித:" என்று உபஸம்ஹாரத்திலும் கூறினான். வேதாந்தத்தில் கூறப்படும் த்யாகமும் ஸந்ந்யாஸமும் இரண்டும் ஒன்றே என்பதனை, பதினெட்டாம் அத்யாயாரம்பத்தில் ஸ்வகீயப்ரமாணத்தாலே நிரூபித்து, ஸந்ந்யாஸமான த்யாகமாவது, கர்மங்களை பகவதாராதனமாகச் செய்து கொண்டே, கர்த்ருத்வபுத்தி-மமதா-பலஸங்கங்களை விடுவது என்று கூறினான்.

இத்தால், "கர்மம் பேதகடிதமாகையால் அத்வைத ஜ்ஞானத்துக்கு விருத்தம். ஆகையால் த்யாஜ்யம்" என்ற பக்ஷம் நிரஸ்தம். "யஜ்ஞதாநதப: கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத்। யஜ்ஞோ தாநம் தபச்சைவ பாவநாநி மநீஷிணாம்॥" என்கிறே கீதாசார்ய ஸித்தாந்தம். "வர்ணாச்ரமாசார வதா புருஷேண பர: புமாந்। விஷ்ணுராராத்யதே பந்தா நாந்ய: தத்தோஷகாரக:॥" என்கிறே ஸ்ரீபராசரபகவான் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் அறுதியிட்டார். "தோஷகாரக:" என்று, கர்மத்துக்கு பகவத்தோஷஹேதுபூத ஜ்ஞாநாங்கத்வம் உக்தம். ஆக உபாயமான ஜ்ஞாநம் கர்மாங்கம் என்றதாயிற்று.

நான்காம் அத்யாயத்தில் அவதார ரஹஸ்யப்ரகரணத்தில் ஸம்ஸாரிகள் கண்காண நிற்கும் தன்னுடைய எளி

மையையும். பதினைந்தாம் அத்4யாயத்தில் புருஷோத்தமவி-த்3யா ப்ரகரணத்தில் தன்னுடைய மேன்மையையும் அருளிச் செய்து, பதினெட்டாம் அத்4யாயத்தில் சரமச்லோகத்தில், தன்னுடைய சரண்யத்வத்தை உபதே3சிக்கிறான். "தஸ்மின் த்3ருஷ்டே பராவரே' என்று வேதாந்தம் ப4க3வானைப் "பராவரன்" என்றிறே நிரூபிக்கிறது. தத்வடீகையில், "பராவர" சப்3தத்துக்கு அநேகார்த்த2ங்கள் அருளிச் செய்யும் அடைவிலே, "பரத்வ ஸௌலப்4ய பூர்ணன் பராவரன்" என்று இதுதன்னையும் தே3சிகன் அருளிச்செய்தாரிறே. பரத்வ ஸௌலப்4ய பூர்ணனே சரண்யன் என்று ஸம்ப்ரதா3ய நிஷ்கர்ஷம். ஆச்ரயண ஸௌகர்யாபாத3கம் ஸௌலப்4யம். ஆச்ரிதகார்யாபாத3கம் பரத்வம் என்று விபா4க3மும் பூர்வர்கள் க்3ரந்த2ங்களிலே காட்டப் பட்டுள்ளது.

தே3ஹாத்மாபி4மானத்தாலே அர்ஜுநன் சோகிக்க, அதனைக்கண்ட ப4க3வான் "தஸ்மாத் அபரிஹார்யேऽர்த்தே2 ந த்வம் சோசிதுமர்ஹஸி" என்று தே3ஹாத்மாக்களின் நித்யத்வாநித்யத்வங்களை நன்கு உபதே3சித்து, சோகத்தைப் போக்கினான். இது இரண்டாவது அத்4யாயத்தின் ஸாரம். தை3வ ஆஸுர ஸம்பத்3 விசேஷங்களைக்கேட்ட அர்ஜுநன், தன்னை ப4க3வான் எந்த கோடியிலே திருவுள்ளம்பற்றினானோ என்று சோகிக்க, அதனைக் கண்ட ப4க3வான், "மாசுச: ஸம்பத3ம் தை3வீம் அபி4ஜாதோऽஸி பாண்ட3வ" என்று தை3வீஸம்பத்3விசிஷ்டனாகவே அர்ஜுநனைக் கொண்டாடி, அவனுக்கு ஏற்பட்ட சோகத்தைப் போக்கினான். இது பதினாறும் அத்4யாயத்தின் ஸாரம். து3ஷ்கரங்களாயும் ஜீவ ஸ்வரூபமான ப4க3வச்சே2ஷத்வத்துக்கு விருத்3த4ங்களாயும் உள்ள கர்மாத்3யுபாயாந்தரங்களைக்கேட்டு சோகித்தான் அர்ஜுநன். அதனைக் கண்ட ப4க3வான் "ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ। அஹம் த்வா ஸர்வ பாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:॥" என்று உபா

யாந்தரங்களைத் துரந்து தன்னையே உபாயமாகப் பற்றச் சொல்லி சோகத்தைப் போக்கினான். ஸ்ரீ வால்மீகி பகவானுக்கு உட்கிடந்த சோகமே ஶ்லோகமாகப் புறப்பட்டது. "சோக: ஶ்லோகத்வமாகத:" என்கிறபடியே சோகஜநிதமிறே ஶ்லோகம் அங்கு. இங்கு கீதாசார்யனுடைய ஶ்லோகங்கள் ஆஶ்ரித சோக நிவர்த்தகங்களிறே என்றபடி. "ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம்" என்று ஜீவபர பேதத்திலே தொடங்கி, "மாம் ஶரணம் வ்ரஜ அஹம் த்வா மோக்ஷயிஷ்யாமி" என்று ஶரண்ய ஶரணாகத ரக்ஷ்ய ரக்ஷக பேதத்திலே தலைக்கட்டுகிறதிறே பேதஶ்ருதி ப்ரதிபாதகமான கீதா ஶாஸ்த்ரம். "ஜீவபரயாதாத்ம்ய ஜ்ஞாந பூர்வக வர்ணாஶ்ரம தர்மாங்கக பரமபுருஷசரணயுகள பக்தி—பகவத் ப்ராப்தி ஹேதுவாகும். இதற்கு ப்ரபத்தி அங்கமாகும்" என்றிங்ஙனே ஒருபடி கீதா நிர்வாஹம். அங்ஙனன்றிக்கே, "பகவானே ஸர்வாத்மாக்களுக்கும் ஸர்வ புருஷார்த்தப்ராப்திக்கும் ஸித்தோபாயபூதன், ஸாக்ஷாத் தர்மபூதன்" என்று இங்ஙனே ஒருபடி கீதாநிர்வாஹம். பூர்வோக்தநிர்வாஹத்தில் கீதை அங்கப்ரபத்திபரம் என்றும், உத்தரநிர்வாஹத்தில் கீதை ஸ்வதந்த்ரப்ரபத்திபரம் என்றும் தேறும். நான்காம் அத்யாயத்தில் தர்மஸம்ஸ்தாபநம் ஸ்வாவதார ப்ரயோஜநம் என்று கூறின கீதாசார்யன் பதினெட்டாம் அத்யாயத்தில் "எல்லா தர்மங்களையும் விட்டு என்னைப்பற்று" என்கையாலே ஸாக்ஷாத் தர்மம் அவனே என்று விளங்கும். "யே ச வேதவிதோ விப்ரா: யே ச அத்யாத்மவிதோ ஜநா:। தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்॥" என்றுமிறே ஆக அவனே உபாயபூதன் என்றதாயிற்று.

"மத்பக்தா யாந்தி மாமபி" "மம ஸாதர்ம்யமாகதா:" "மாமேதி ஸோர்ஜுந" "மாமேவ ஏஷ்யஸி" என்று இங்ஙனே பகவான் ப்ராப்யனாகவும் கூறப்பட்டான். ஆக பரதத்வ பரமஹித பரம ப்ராப்யபூதன் நாராயணனே

என்றே நாராயணனவதாரமான ஸ்ரீகிருஷ்ணன் கீ₃தையில் உபதே₃சித்தான் என்றதாயிற்று.

"த₄ர்மக்ஷேத்ரே" என்ற த்₄ருதராஷ்ட்ரவாக்யத்திலே தொடங்கி, "யத்ர யோகே₃ஶ்வர:" என்ற ஸஞ்ஜயவாக்யத்திலே ஸமாப்தமாகிறது கீ₃தை. கேசவார்ஜுநஸம்வாத₃த்தை அடக்கிக்கொண்டிருக்கிற ஸஞ்ஜய த்₄ருதராஷ்ட்ர ஸம்வாத₃மிறே இப்ரகரணம்.

தத்வவிவேக நித்யத்வா நித்யத்வ நியந்த்ருத்வ ஸௌலப்₄ய ஸாம்ய அஹங்கார இந்த்₃ரிய தே₃ஹாஷ்டபு₃ஷ மந: ப்ராதா₄ந்ய கரண நியமந ஸம்ஸ்க்ருதிபே₄த₃ தே₃வாஸுர விபா₄க₃ விபூ₄தியோக₃ விஶ்வரூபத₃ர்ஶந ஸாங்க₃ ப₄க்தி ப்ரபத்தித்₃வைவித்₄யாதி₃கள் கீ₃தார்த்த₂ங்களாகும். "ஆயன் துவரைக்கோனாய் நின்ற மாயன் அன்றோதிய வாக்கு" வாழ்க வாழ்க.

கீ₃தார்த்த₂ங்களை உள்ளபடி நாம் அறியும்படி அவதரித்த கீ₃தா வ்யாக்₂யாநங்கள் ஆளவந்தார் அருளிச்செய்த கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹம். எம்பெருமானார் அருளிச்செய்த கீ₃தா பா₄ஷ்யம். தே₃சிகன் அருளிச்செய்த கீ₃தா பா₄ஷ்ய தாத்பர்ய சந்த்₃ரிகை. வாதி₃கேஸரி அழகியமணவாளச் சீயர் அருளிய கீதை வெண்பா என்றிவையாம். இவற்றில் தாத்பர்யசந்த்₃ரிகை தவிர்ந்த மற்ற க்₃ரந்த₂ங்களுடனும், தாத்பர்யசந்த்₃ரிகையின் அர்த்த₂க்கதையும் உள்ளடக்கி பெண்ணுக்கும் பேதைக்கும் அறியலாம்படி செந்தமிழாலே தாமியற்றிய கீ₃தார்த்த₂ விவரணத்துடனுப் கீ₃தையை அச்சிட்டு ஆஸ்திக உலகுக்கு மஹோபகாரம் புரிந்துள்ளார் நமக்குப் பரமாப்தரான ஸ்ரீ. உ. வே. புத்தூர். S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி. அன்னாருடைய நற்பணி மேன்மேலும் தழைத்தோங்க ஸ்ரீ ருக்மிணீ ஸமேத ஸ்ரீ பார்த்தஸாரதி₂ ஸ்வாமியுடைய திருவடித் தாமரைகளில் இறைஞ்சி நிற்கிறேன்.

சென்னை. பரித₄ாவி பங்குனி உத்திரம் கி. வரதாசார்யர்.

ஶ்ரீ:

# ஶ்ரீமத்3 ப4க3வத்3 கீ3தா
# ப்ரத2மஷட்க பாதா3நுக்ரமணிகை

[இதில் முதல் ஆறு அத்தியாயங்களில் உள்ள ஶ்லோகங்களின் பாத3ங்களின் அட்டவணை அத்4யாய ஶ்லோக எண்களுடன தரப்பட்டுள்ளது. அந்த ஶ்லோகங்களின் முதல் பாத3ப்பகுதிகள் பருத்த எழுத்துக்களில் அவை தொடங்கும் பக்கங்களுடன அச்சிடப்பட்டுள்ளன.]

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 31 | வியாக்கியனம் | வியாக்கியானம் |
| 5 | 5 | भत्येक | भक्त्येक |
| 6 | 29 | ஷட்கங்கள் | அத்தியாயங்கள் |
| 12 | 8 | உத்$_{8}$தி$_{2}$ஶ்ய | உத்$_{3}$தி$_{3}$ஶ்ய |
| 13 | 5 | यत्पदाम्भोरु | यत्पदाम्भोरुह |
| 16 | 5 | स्ववमेव | स्वयमेव |
| ,, | 9 | இருப்பிடமாமக் | இருப்பிடமாகக் |
| ,, | 14 | பரப்ப்ரஹ்ம | பரப்$_{8}$ரஹ்ம |
| ,, | 19 | பதத்திலிருககும் | பத$_{3}$த்திலிருக்கும் |
| 38 | 29 | சங்கோஷம் | ஶங்க$_{2}$கோ$_{4}$ஷம் |
| 39 | 5 | राष्ट्रान् | राष्ट्रान् |
| 41 | 12 | தேஷாமீஷா | தே̂ஷாமீஶா |
| 42 | 23 | யிருப்பதலாலே | யிருப்பதனாலே |
| 46 | 16 | சதாரம் | சகாரம் |
| 53 | 19 | தஙகள் | தங்கள் |
| 53 | 32 | பொருளும், | பொருளும், அறிவும், |
| 56 | 31 | களையோ | களையே |
| 60 | 6 | வார்ஷ்ணயே | வார்ஷ்ணேய |
| 64 | 18 | ரதோ$_{3}$ | ரதோ$_{2}$ |
| 75 | 25 | பை$_{8}$க்ஷம் | பை$_{4}$க்ஷம் |
| 77 | 1 | तेष्वसनेपू | तेष्वासनेषू |
| 88 | 19 | வுள்ளவனுகி | வுள்ளவனுகில் |
| 93 | 4 | दन्तरे | दनन्तरे |
| 95 | 30 | அந்த:கர | அந்த: |
| 98 | 4 | கூடஸத | கூடஸ்த$_{2}$ |
| 99 | 6 | புருஷன | புருஷன் |
| 99 | 12 | பொருள்கனை | பொருள்களை |
| 104 | 9 | உணமை | உண்மை |
| 109 | 20 | காணகிற | காண்கிற |
| 109 | 28 | உண்யையான | உண்மையான |
| 113 | 2 | यौवाना | यौवना |

| | | | |
|---|---|---|---|
| 114 | 11 | பவஜே | வஜே |
| 116 | 2 | து:க்3க2 | து3:க்க2 |
| 118 | 30 | ஸபர்ச | ஸ்பர்ஶ |
| 121 | 4 | निद्यते | विद्यते |
| 127 | 27 | வ்யுத்பத்தி— | வ்யுத்பத்தி. |
| 133 | 2 | चानेकोपचाया | चानेकोपचया |
| 134 | 3 | द्यापक | द्व्यापक |
| ,, | 4, 5 | அவய | அவயவ |
| 139 | 32 | தனமை | தன்மை |
| 145 | 1 | हेतुनैनं | हेतुनैनं |
| 146 | 13 | பிரரணி | பிராணி |
| 154 | 22 | நித்யமேன்றறி | நித்யமென்றறி |
| 158 | 20 | வஸதிர | வஸ்திர |
| 159 | 7 | சேச2த்3யோயமத2ா | சேச2த்3யோயமத3ா |
| 161 | 3 | பொருள்களை | பொருள்கள் |
| 162 | 3 | सनातनः | सनातनः- |
| 163 | 5 | நித்ய | நித்ய: |
| 166 | 23 | அனுமானமுமம | அனுமானமும் |
| 170 | 14 | அழித்த | அழிந்த |
| 171 | 6 | அழித்த | அழிந்த |
| 174 | 2 | द्रव्यास्या | द्रव्यस्या |
| 176 | 11 | என்றும் | என்னும் |
| 179 | 23 | என | என் |
| 188 | 24 | றன: | றது; |
| 198 | 3 | பூ4நாநி | பூ4காநி |
| 198 | 4 | ஸம்ப3ா | ஸம்ப4ா |
| 199 | 4 | शौय | शौर्य |
| 200 | 4 | தவர்ம் | த்வாம் |
| 200 | 24 | அகீர்த்திர் | அகீர்த்திர் |
| 202 | 1 | शूरणां | शूराणां |
| 203 | 2 | बडून् | बहून् |

| | | | |
|---|---|---|---|
| 204 | 27 | பேரபகாரம | பேரபகாரம் |
| 205 | 1 | अतशूर | अतः शूर |
| 206 | 20 | சிறக்க | சிறந்த |
| 209 | 2 | परजय | पराजय |
| 209 | 13 | து$_2$:க்கே$_2$ | து$_3$:க்கே$_2$ |
| 212 | 1 | धारयणी | धारणीय |
| 218 | 25 | காம்யகர்ம | காம்யப$_2$ல |
| 218 | 31 | ஜானமும் | ஜ்ஞாநமும் |
| 219 | 18 | யாத$_2$ாதம்ய | யாத$_2$ாத்ம்ய |
| 221 | 3 | ப$_2$ஹூசாக$_2$ா | ப$_3$ஹூஶாக$_2$ா |
| 221 | 19 | இவற்றை | இவை |
| 221 | 25 | மோஷம் | மோக்ஷம் |
| 226 | 5 | भौगै | भोगै |
| 228 | 25 | ஸவர்க்கம் | ஸ்வர்க்க$_3$ம் |
| 230 | 23 | த$_3$ராதீ$_3$நீ | த$_3$ராதீ$_3$நி |
| 231 | 17 | புஷ்பிதம் | புஷ்பிதாம் |
| 231 | 22 | ம்ற்றொன்று | மற்றொன்று |
| 231 | 27 | ஏஷமிதி | ஏஷாமிதி |
| 233 | 23 | பரதி | ப்ரதி |
| 233 | 7 | போகைச்வர்யர் | போ$_4$கை$_3$ஶ்வர்யங் |
| 233 | 10 | வயவ | வ்யவ |
| 237 | 30 | உண்டாக்குகின்வை | உண்டாக்குகின்றவை |
| 238 | 22 | ஸ்வர்க்கதி | ஸ்வர்க்க$_3$ாதி$_3$ |
| 238 | 24 | முடியாம | வேண்டாம |
| 239 | 21 | முதலாறு | முதலான |
| 242 | 21 | கழித்து | குறைத்து |
| 246 | 31 | முமுக்ஷூ | முமுக்ஷூ |
| 247 | 4 | .. | .. |
| .. | 8 | .. | .. |
| .. | 31 | .. | .. |
| 248 | 3 | हैतुर्मूः | हैतुर्भूः |

| | | | |
|---|---|---|---|
| 248 | 14 | முழுக்ஷு | முமுக்ஷு |
| .. | 15 | பவதா | ப4க3வத3ா |
| .. | 19 | காம | கர்ம |
| .. | 24 | கொளளுமது | கொள்ளுவது |
| 258 | 21 | மபுண்யமபுண்ய | மபுண்ய |
| 264 | 31 | சீ2ல | சீ2ல |
| 269 | 19 | ஸதி2த | ஸ்தி2த |
| 271 | 27 | என்ப்படுபவன் | எனப்படுபவன் |
| 274 | 3 | वितराग | वीतराग |
| 278 | 24 | எனறு | என்று |
| 282 | 3 | दष्टा | दृष्टा |
| 284 | 8 | தாநீந்த்2ரி | தாநீந்த்3ரி |
| 286 | 2 | पूरुष | पुरुष |
| 304 | 23 | நிக்3ரஹம | நிக்3ரஹம் |
| 305 | 5 | த3த்வத் | தத்3வத் |
| 310 | 7 | ब्रह्म | ब्रह्म |
| 314 | 14 | வரணாச்ரம | வர்ணாஶ்ரம |
| 319 | 21 | முயைதி | முபைதி |
| 321 | 1 | த்4யாயுத2 | த்4யாயீத2 |
| 322 | 24 | நீரீல் | நீரில் |
| 325 | 8 | दर्शिन | दर्शिनं |
| 329 | 15 | இவ்வுலப் | இவ்வுலகப் |
| 330 | 1 | नियोजयसीति | नियोजयसीति। |
| 333 | 3 | ஜஞான | ஜ்ஞான |
| 334 | 3 | सिद्धि | सिद्धि |
| 335 | 5 | वुद्धिः | वुद्धिः |
| 338 | 15 | கர்மி | கர்ம |
| 340 | 19 | வாழும | வாழும் |
| 342 | 26 | ஈடுபட்டாலும் | ஈடுபாட்டாலும் |
| 349 | 1 | पपद्यते | पपद्यते। |
| 349 | 2 | ज्ञान-। | ज्ञान- |

| | | | |
|---|---|---|---|
| 350 | 14 | என் க. | என்கை. |
| 353 | 4 | पुरुस्य | पुरुषस्य |
| 355 | 17 | செய்யபடு | செய்யப்படு |
| 357 | 3 | पुजावाच | पुरोवाच |
| 364 | 1 | सृष्टै | सृष्ट्वै |
| 367 | 13 | கருக்நு. | கருத்து. |
| ,, | 22 | ஸ்வார்க்காதி | ஸ்வர்க்க$_3$ாதி$_3$ |
| ,, | 31 | ஸத்தாயம் | ஸத்தாயாம் |
| 371 | 2 | बुधि | बुद्धि |
| 375 | 1 | पापामानो | पापात्मानो |
| 377 | 31 | அனன | அன்ன |
| 379 | 10 | முதிஷ்ட$_2$தே | முயதிஷ்ட$_2$தே |
| 380 | 32 | பவதாகக் | படுவதாகக் |
| 382 | 2 | चकम् | चक्रम् |
| ,, | 21 | அங்கம | அங்கம் |
| 385 | 2 | पवन्द्रि | पवेन्द्रि |
| 386 | 7 | कायं | कार्यं |
| 389 | 16 | ஆதமாவையே | ஆத்மாவையே |
| ,, | 20 | வ்யவச்சே$_2$தத்$_3$தைச் | வ்யவச்சே$_2$த$_3$த்தைச் |
| 390 | 19 | களுக்கு | க்கு |
| 391 | 1 | वृत्य | वृत्त्य |
| 399 | 1 | यत्प्रमणं | यत्प्रमाणं- |
| 407 | 1 | सर्व दा | सर्वदा |
| ,, | 2 | वेत्म | वेर्त्म |
| 409 | 2 | विदशिशाघ्रा | विदश्शिशाघ्रा |
| ,, | 18 | ஸஹோதர்களின் | ஸஹோத$_3$ரர்களின் |
| 411 | 30 | பயற்சி | பயிற்சி |
| 412 | 26 | ஸ்வாநுஷ்ட$_2$ாதே | ஸ்வாநுஷ்ட$_2$ாநே |
| 413 | 3 | कमयोगा | कर्मयोगा |
| ,, | 23 | புத்$_3$தி$_3$ | பு$_3$த்$_3$தி$_4$ |
| 414 | 37 | वा हो | वाह्यो |

| | | | |
|---|---|---|---|
| 414 | 17 | யுக்த: | யுக்த:— |
| 415 | 1 | க்ரியமாணாதி | க்ரியமாணாநி |
| 417 | 15 | திஶேஷத4 | நிஶேஷத4 |
| .. | 19 | மந்தே | மந்யதே |
| 423 | 25 | சாஸதிரம் | ஶாஸ்த்ரம் |
| 424 | 22 | கர்த்ருத்வத்தையும். | கர்த்ருத்வத்தையும்— |
| 425 | 30 | இருககும் | இருக்கும் |
| 426 | 24,26 | இவை | அவை |
| 431 | 5 | ஶரத்3த4ா | ஶ்ரத்3த4ா |
| .. | 9 | இவர் | அவர் |
| 437 | 15 | மில்லாததாகை | மில்லாத |
| 441 | 25 | கர்மேந்தி3ரியம் | கர்மேந்த்3ரியம் |
| 442 | 11 | வெண்ணாமல் | வொண்ணாமல் |
| .. | 18 | கின்றன | கின்றனவோ |
| 443 | 7 | பரிஹத்து | பரிஹரித்து |
| 449 | 22 | வளையிலும் | வளையினும் |
| 450 | 17 | மாகவுமாகவுமாம் | மாகவுமாம் |
| 452 | 4 | परिहिंसा | परहिंसा |
| 455 | 27 | அநநதி | அநாதி3 |
| 459 | 30 | இவ்வ | இவ் |
| .. | 31 | (ஜஞாநம் | (ஜ்ஞாநம் |
| 463 | 22 | ஸ்வத்ந்த்ரா | ஸ்வதந்த்ரா |
| 465 | 15 | ஸவரூப | ஸ்வரூப |
| 470 | 11 | மைலேயியே | மையிலேயே |
| 471 | 15 | ப்4யயஶ்ச | ப்4யஶ்ச |
| 475 | 2 | [3-3] | [33] |
| ,, | 10 | எனறு | என்று |
| 476 | 7 | ஸம்ஸதப்4ய | ஸம்ஸ்தப்4ய |
| 476 | 20 | வ்ருத்தியாகும் | வ்ருத்2த4மாகும் |
| 480 | 4 | प्रसङ्गगा | प्रसङ्गा |
| 482 | 1 | चतुर्थाध्यायः | चतुर्थोऽध्यायः |

| | | | |
|---|---|---|---|
| 482 | 5 | व्शापदे | व्यपदे |
| 485 | 12 | எனனாலே | என்னாலே |
| ,, | 31 | எனனை | என்னை |
| 486 | 16 | கூறுவதன | கூறுவதன் |
| ,, | 20 | எனறு | என்று |
| 488 | 22 | எனறு | என்று |
| ,, | 24 | பரத்ய | ப்ரத்ய |
| ,, | 29 | அனறை | அன்றை |
| 490 | 18 | பதனறோ | பதன்றோ |
| ,, | 27 | விவதி3ஷ | விவிதி3ஷு |
| 491 | 8 | முன | முன் |
| 492 | 1 | च तु र्युग | चतुर्युग |
| 494 | 2 | नाराद | नारद |
| ,, | 20 | கேடடி | கேட்டி |
| 503 | 21 | த4ாநு | த4ாது |
| 504 | 5 | பத்தாலே | பத4த்தாலே |
| 505 | 10 | மூர்ந்திகள் | மூர்த்திகள் |
| 506 | 28 | நாலாவது | இது நாலாவது |
| 508 | 13 | மாகவும | மாகவும் |
| 509 | 20 | உபாஸன | மோக்ஷார்த்த2 உபாஸன |
| 510 | 29 | மாகையாலும் | மாகையால் |
| 511 | 16 | வோகவத் | லோகவத் |
| 512 | 22 | தஸ்யா | தஸ்ய |
| 513 | 29 | ஶ்லோகத்திவ் | ஶ்லோகத்தில் |
| 515 | 2 | चातुर्वण्य | चातुर्वर्ण्य |
| 516 | 28 | அக3ாப்2ய: அதோ | அக3ாப்4ய: ததோ |
| 519 | 17 | தொழுதொழு | தொழுதெழு |
| ,, | 26 | படடு | பட்டு |
| 522 | 15 | க3ச்ச4ாநு | க3ச்ச2ாநு |
| 524 | 34 | பிறபபாய் | பிறப்பாய் |
| 525 | 24 | நுஷ்ட3ாந | நுஷ்ட2ாந |

| | | | |
|---|---|---|---|
| 527 | 14 | தி4ஷ்டா4ய | தி4ஷ்டா2ய |
| 532 | 10 | பராரப்3த4 | ப்ராரப்3த4 |
| ,, | 14 | உபாஸிககும் | உபாஸிக்கும் |
| 533 | 32 | முற்கூடிய | முற்கூறிய |
| 537 | 2 | मन्यया | मन्मया |
| 538 | 34 | ப4விகக | ப4விக்க |
| 544 | 23 | வேண்டும். | கொள்ளவேண்டும். |
| 547 | 8 | சித்தித்து | சிந்தித்து |
| 548 | 26 | அவனுகும | அவனுக்கும் |
| ,, | 29 | ஐதிஹ்யர்களும் | ஐதிஹ்யங்களும் |
| ,, | 30 | கரண | காண |
| 550 | 1 | दर्शयाभि। | दर्शयासि। |
| 557 | 6 | அறம | அறம் |
| ,, | 9 | புருஷன் | புத்திரன் |
| ,, | 29 | பூஜயாம் | பூஜாயாம் |
| 559 | 18 | (ஸித்2தி4ர் | (ஸித்3தி4ர் |
| ,, | 23 | க்ஷூத்2ரப3ல | க்ஷூத்3ரப2ல |
| 563 | 17 | என்றும் கூறும் | என்று கூறும் |
| ,, | 34 | க்ஷூத்2ர | க்ஷூத்3ர |
| 564 | 13 | கட்டுப்படுவ | கட்டப்படுவ |
| 565 | 4 | யகலவான் | யகல்வான் |
| 566 | 2 | संवध्नन्ति | संबध्नन्ति |
| ,, | 13 | ப்ரக்ரண | ப்ரகரண |
| 567 | 3 | भुज्जते | भुञ्जते |
| ,, | 9 | ஜீவா | ஜீவர் |
| ,, | 16 | அகர்த்ருத்வதகை | அகர்த்ருத்வத்தை |
| ,, | 24 | போக்3யப | பே4ாக்3யப் |
| ,, | 28 | ஸங்கல்பத்தால் | ஸங்கல்பத்தால் மட்டும் |
| 567 | 7 | எனறல் | என்றல் |
| 570 | 1 | करणी भूता | कारणी भूता |
| 570 | 12 | புருஷனின | புருஷனின் |

| | | | |
|---|---|---|---|
| 570 | 23 | கரண | காரண |
| 571 | 14 | எனனும் | என்னும் |
| .. | 18 | கரணஸப்தம் | காரண ஸப்$_3$த$_3$ம் |
| .. | 24 | ப்ரத$_4$ாநகரண | ப்ரத$_4$ாந காரண |
| 575 | 22 | முமுக்ஷுக்களால் | முமுக்ஷுக்களாலும் |
| 577 | 1 | विं रूपम् | किंरूपम् |
| 578 | 18 | முத்கூறியபடி | முற்கூறியபடி |
| ,, | 23 | என்று | என்றும் |
| 580 | 32 | சொனனபடி | சொன்னபடி |
| 581 | 11 | பொருநதாது | பொருந்தாது |
| 586 | 11 | விவக்ஷாயம் | விவக்ஷாயாம் |
| 590 | 20 | வல்லதான | வல்லாததான |
| 590 | 27 | வெனறு | வென்று |
| 607 | 14 | பத்தியரல் | பத்தியால் |
| 608 | 31 | சொனன | சொன்ன |
| 610 | 1 | பாயுபர்ஸதே । | பர்யுபாஸதே । |
| ,, | 2 | ப்$_2$ரஹ்மா | ப்$_3$ரஹ்மா |
| 611 | 20 | ப்$_3$ரஹ்மாத்மாக | ப்$_3$ரஹ்மாத்மகமாக |
| .. | 26 | வளைத் | வர்களைத் |
| 616 | 9 | நியமிபபது | நிமிமிப்பது |
| 622 | 16 | கொள்வது | கொள்வதும் |
| ,, | 34 | வேதமோதுதவோடு | வேதமோதுதலைக் குறிக்கும் ஸ்வாத்$_4$யாய ஸப்$_3$த$_3$த்தோடு |
| 623 | 8 | ப்ராறாந் | ப்ராணாந் |
| 624 | 1 | ப்ராறாயாம | ப்ராணாயாம |
| 625 | 7 | ஶ்லோகங்களாலே | ஶ்லோகத்தாலே |
| 626 | 8 | முற்கூடியபடி | முற்கூறியபடி |
| ,, | 15 | ஒன்றாகப் | ஒன்றாக்கப் |
| ,, | 32 | கையாயால் | கையால் |
| 628 | 23 | அநுஷ்டிப்பனையும் | அநுஷ்டிப்பதையும் |

| | | | |
|---|---|---|---|
| 628 | 27 | எனனும் | என்னும் |
| 629 | 23 | என்றும் | என்று |
| 632 | 21 | முக்$_2$யம், த்$_3$வாரம். | முக்$_2$யம். |
| 636 | 20 | ஞானமஸ்த்தை | ஜ்ஞானம்ஸ்த்தை |
| 637 | 25 | விளங்கிறது | விளங்குகிறது |
| 640 | 14 | பிள்ளை | பிள்ளை. |
| ,, | ,, | ப்ரணியாத: | ப்ரணிபாத: |
| 641 | 24 | பரிப்ங்ஶ்ந: | பரிப்ரஶ்ந: |
| 645 | 11 | பெறுமபோது | பெறும்போது |
| ,, | 18 | மாட்டயோ | மாட்டாயோ |
| ,, | 19 | நந்தமயமன | நந்த$_3$மயமான |
| 647 | 13 | பே$_4$த$_4$ா | பே$_4$த$_3$ா |
| 648 | 10 | ஸமமமாக | ஸமமாக |
| 649 | 6 | அபிசேத | அபிசேத் |
| ,, | 8 | ஜஞான | ஜ்ஞான |
| ,, | 23 | லடல்கிய | லடங்கிய |
| 651 | 4 | ஜஞானா | ஜ்ஞானா |
| 652 | 14 | ஸ்மித்$_3$த$_4$: | ஸமித்$_3$த$_4$: |
| 653 | 8 | மேலும் | மேலும் இங்கு |
| 654 | 18 | முயனறு | முயன்று |
| 657 | 9 | த$_4$ாங்: | த$_4$ாந: |
| 658 | 1 | विषाक | विपाक |
| 660 | 18 | அன்றிக்கே. | அன்றிக்கே, |
| ,, | 19 | மனோ....யமநா: | ஆத்மா....யாத்மா |
| ,, | 28 | யிருந்தது வந்தது | யிருந்து வந்தது |
| 663 | 22 | பரப்ரஹ்மாத் | பரப்$_3$ரஹ்ம |
| 664 | 10 | கித$_3$ா | கீ$_3$தா |
| 666 | 18 | சித்$_2$வா | சி$_2$த்வா |
| ,, | 19 | கக்தி | கத்தி |
| 670 | 26 | தெளிதா | கெளிதா |
| 672 | 2 | कर्मण कृणा | कर्मणां कृणा |

| | | | |
|---|---|---|---|
| 677 | 23 | ஷங்கிககமாக | ஷங்கி3கமாக |
| 681 | 30 | தயோஸ் | தயோஸ்து |
| 682 | 6 | நுபபத்ய | நுபபத்த்ய |
| 684 | 31 | ஸம்யக | ஸம்யக் |
| 686 | 1 | ज्ञाननिष्ठैः। | ज्ञाननिष्ठैः |
| ,, | 9 | ஸாங்க்2ய | ஸாங்க்2ய |
| ,, | 16 | ஸாங்க்2யை | ஸாங்க்2யை : |
| 687 | 34 | மாகக் தனி | மாகத்தனி |
| 688 | 2 | दुःखामा | दुःखमा |
| 691 | 5 | மாக்கொண்டு | மாகக்கொண்டு |
| ,, | 10 | இப்படி ஜ்ஞாந யோகத்திற்குக் கர்ம யோகத்தைக் காட்டிலும் | இப்படி கர்மயோக3த்திற்கு ஜ்ஞாநயோக3த்தைக் காட்டிலும் |
| ,, | 33 | ஸ்தேஹ | ஸ்நேஹ |
| 694 | 1 | भूतात्मा सर्वेषां | भूतात्मा—सर्वेषां |
| 696 | 17 | நிஷ்டடனை | நிஷ்ட்ட2னை |
| ,, | 25 | யாகையாகையாலே | யாகையாலே |
| 700 | 28 | வத்வாத் | வந்த்வாத் |
| 702 | 21 | ஆழ்தி | ஆழ்த்தி |
| 703 | 14 | சொலல | சொல்ல |
| 705 | 5 | ஶாத்2த3யே | ஶாத்2த4யே |
| 708 | 12 | ஶப்3ாதி3 | ஶப்3த3ாதி3 |
| 709 | 4 | आत्मावलो | आत्मावलो |
| ,, | 20 | வ்யத்பத்தி | வ்யுத்பத்தி |
| 712 | 1 | नवद्वारे | नवद्वारे |
| 717 | 6 | பரக்ருதி | ப்ரக்ருதி |
| ,, | 26 | விருநது | விருந்து |
| 718 | 26 | அத்தந்த | அந்தந்த |
| 722 | 3 | त्मामिमानः | त्माभिमानः |
| 727 | 3 | உபக்ரேரா | உபக்ர |

| | | | |
|---|---|---|---|
| 744 | 1 | वाह्य | बाह्य |
| 751 | 7 | தவனுன் | தவனுன |
| 753 | 27 | கிருகையாலே | கிருனுகையாலே |
| 754 | 17 | பரம் பெறு | பதம் பெறு |
| 755 | 9 | த்3வைத4தா: | த்3வைத4ா: |
| 757 | 16 | மனதகை வென் | மனத்தை வென் |
| 768 | 5 | पारस्य | पारस्यं |
| 771 | 4 | आनाश्रितः | अनाश्रितः |
| 779 | 30 | கைவல்ய | கைவல்யம் |
| 783 | 22 | ஸாக்ஷாகார | ஸாக்ஷாத்கார |
| 786 | 5 | மாநவமாந | மாநாவமாந |
| 787 | 27 | னுகையாவே | னுகையாலே |
| 792 | 29 | சேநத | சேதந |
| 797 | 21 | கடவன | கடவன் |
| 799 | 6 | நாதயு | நாத்யு |
| .. | 17 | ஏகாக்2ரம் | ஏகாக்3ரம் |
| 800 | 1 | ச்ரியை | க்ரியை |
| ,, | 3 | ஸம்ஸார | தனக்கு ஸம்ஸார |
| 803 | 34 | செய்ய | சமைக்க |
| 804 | 10 | க்3ரீம் | க்3ரீவம் |
| .. | 16 | விக3த4பீ4: | விக3தபீ4: |
| .. | 18 | மச்சிந்த: | மச்சித்த: |
| 809 | 32 | நிர்வ்ருதி | நிர்வ்ருதி |
| 810 | 10 | யோக2ா | யோக3ா |
| .. | 15 | மைது4ந | மைது2ந |
| 812 | 24 | ப4க4வ | ப4க3வ |
| 814 | 12 | விக்3ரஹத்தொடு | விக்3ரஹத்தோடு |
| .. | 13 | நியநமாநஸ: | நியதமாநஸ: |
| .. | 33 | ப்3ரஹ்ம | ப்3ரஹ்ம |
| 818 | 2 | ஶரந்திம் | ஶாந்திம் |
| 819 | 16 | ப4க4வ | ப4க3வ |

| | | | |
|---|---|---|---|
| 824 | 1 | बोधस्व | बोधस्य |
| 826 | 19 | தை3ஶையை | த3ஶையை |
| 834 | 3 | துன்பத்தை | துன்பம் |
| 836 | 5 | துஷ்ஷயதி | துஷ்யதி |
| .. | 22 | மைக்கும் | மையும் |
| 837 | 13 | யோகா3ப்3யாஸ | யோகா3ப்4யாஸ |
| 839 | 13 | வியுஜ்யுதே | வியுஜ்யதே |
| 840 | 12 | திர்வேக3 | நிர்வேத3 |
| 847 | 17 | பரஶாந்த | ப்ரஶாந்த |
| .. | 25 | ஶுத்4த4மான | ஶுக்3த4மான |
| 866 | 3 | पश्याभि | पश्यामि |
| 876 | 9 | एवं मे | एतं मे |
| 877 | 4 | யோ3க | யோக3 |
| 893 | 29 | சேர்த்தியையையே | சேர்த்தியையே |
| 903 | 10 | காட்டிலும | காட்டிலும் |
| .. | 25 | முதான | முதலான |
| 905 | 19 | ஸாக்ஷாத்காரத்தைக் | ப்ராப்தியைக் |
| 906 | 18 | சிறந்தவன | சிறந்தவன் |
| .. | 27 | பனமை | பன்மை |
| 912 | 35 | நியக்குமி | நியமிக்கு |

கீ3தா வ்யாக்2யான பிழை திருத்தம்

முற்றிற்று.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# உரையாசிரியரின் முன்னுரை

## (ப்ரத₂ம ஷட்கம்)

"அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவர் அறிய நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி" [திருவாய் 4-8-6] என்று நம்மாழ்வார் அருளிச்செய்த படியே, 'அறிவில்லையே' என்று குறைவுபட அறியாத இவ்வுலகத்தவர் அறியும்படியாக, அவரவர் பக்குவத்திற்கு ஏற்றபடி பற்பல மோக்ஷோபாயங்களை ஸர்வஜ்ஞனான கண்ணன் அருளிச்செய்த தி₃வ்யக்₃ரந்த₂ம் கீ₃தா ஶாஸ்த்ரம் என்று உலகில் புகழ்பெற்று விளங்குகிறது. "மாயன் அன்று ஐவர் தெய்வத் தேரினிற் செப்பிய கீதையின் செம்மைப பொருள் தெரியப் பாரினிற் சொன்ன இராமாநுசன்" [இராமாநுசநூற்றந்தாதி 68] என்று திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்தபடியே அந்த கீ₃தாஶாஸ்திரத்தின் உண்மையான பொருளை உலகினர் அறியும்படி பா₄ஷ்யம் அருளியவர் 'எம்பெருமானார்' என்று புகழ் பெற்ற ஸ்ரீ ப₄க₃வத்₃ராமாநுஜமுனிவர் ஒருவரேயாவர். அந்த பா₄ஷ்யத்தின் ஆழ்பொருள்கள் அனைத்தையும் கவிதார்க்கிககேஸரியான ஸ்ரீ வேதா₃ந்ததே₃ஶிகர் தமது தாத்பர்யசந்த்₃ரிகையென்னும் கீ₃தாபா₄ஷ்யடீகையில் விவரித்தருளினார். இந்த பா₄ஷ்யமும் டீகையும் வடமொழியில் அமைந்தவை. அந்த கீ₃தாபா₄ஷ்யத்தை அநுஸரித்து கீ₃தா ஶ்லோகங்களை ஒன்றுவிடாமல் தமிழில் வெண்பாவாகப் பாடியருளினார் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையின் சிஷ்யரான வாதி₃கேஸரி அழகியமணவாள ஜீயர். இவற்றில் தாத்பர்யசந்த்₃ரிகை க்₃ரந்த₂மாலைப் பதிப்பில் வெளியிடப்பட்டுள்ளது. மற்றவையனைத்தையும், கீ₃தா பா₄ஷ்யத்திற்கு வழிவகுத்துக்கொடுத்த ஆளவந்தாரின் கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்தையும், அதைத் தமிழ்ப் பாட்டாகிய ஸ்ரீ வேதா₃ந்ததே₃ஶிகரின் கீதார்த்த சங்கிரகத்தையும் பத்₃யங்களுக்குப் பதவுரைகளோடு வெளியிட்டு இவையனைத்தின் ஆழ்பொருள்களையும் எளிய தமிழ் நடையில் விளக்கும் கீ₃தாவ்யாக்₂யானம் ஒன்றையும் வெளியிட வேண்டும் என்னும் ஆசை பல வருடங்கட்கு முன்னமே அடியேற்கு உண்டாயிற்று. பல ஆயிரம் பக்கங்கள் வரக்

கூடிய இந்நூலை மாதா மாதம் ( எட்டு பக்கங்கள்கொண்ட ) ஒரு பாரமாக ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்ஶனம் என்னும் ( அடியேனை ஆசிரியனாகக்கொண்ட ) மாதப்பத்திரிகையில் சார்வரி வருஷம் மார்கழி மாதத்திலிருந்து தொடர்ந்து வெளியிடலானேன். அந்நூலின் (முதலாறு அத்தியாயங்களடங்கிய ) ப்ரத₂மஷட்கம் சுமார் ஆயிரம் பக்கம்கொண்டதாக ப்ரமாதி₃ (ப்ரமாதீ₃ச)ஞு சித்திரையில் ரேவதியில் நம்பெருமாள் ரதோ₂த்ஸவம் கொண்டாடும் இன்று நிறைவு பெறுகின்றது.

இரண்டாவது அத்தியாயத்திலிருந்து தொடங்கி ஒவ்வோரத்தியாயத்தின் கடைசியிலும் கீ₃தா ஶ்லோகார்த்தசூச் சுருக்கம் என்னும் பகுதியில் ஒவ்வோரத்தியாயத்தின் முக்கிய விஷயங்கள் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இது இந்நூலுக்கு ஓர் விஷயஸூசிகையாகவும் அமைந்துள்ளது. முதல் ஷட்கத்திலுள்ள கீ₃தா ஶ்லோகங்களின் பாத₃ாநுக்ரமணிகை ஒவ்வொரு ஶ்லோகத்தின் அத்₄யாய ஶ்லோக எண்களுடன் அச்சிடப்பட்டுள்ளது. அதில் ஶ்லோகாதி₃யான முதல் பாத₃ம் தடித்த எழுத்தில் ஶ்லோகம் தொடங்கும் பக்கத்தின் எண்களோடும் அச்சிடப்பட்டுள்ளது. பிழை திருத்தமும் பூர்ணமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. நூலின் பின் பகுதிகளில் அச்செழுத்துக்களின் தேய்மானத்தினால் புள்ளி விழாமலிருத்தல் போன்ற சில எளிய பிழைகள் திருத்தப்படாமலிருக்கலாம். அவற்றைத்திருத்திக் கொள்வது. கீ₃தாபா₄ஷ்யத்திலும், தாத்பர்யசந்த்₃ரிகையிலும் எடுக்கப்பட்டுள்ள ப்ரமாணங்கள் கீ₃தார்த்த₂ விவரணம் என்னும் அடியேனது தமிழ் வ்யாக்₂யானத்தில் (நமது மற்ற நூல்களிற்போல்) ஆகரத்தோடும் அர்த்த₂த்தோடும் கொடுக்கப்பட்டுள்ளன.

சென்ற பரித₄ாவி கார்த்திகையில், இந்நூலில் இப் பரிஷ்காரங்களில் சில அச்சிடப்படாமலிருந்தபோதே, ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஸுத₃ர்ஶனத்திற்கு வெள்ளி விழா கொண்டாடப்பட்டபோது, திருவரங்கராஜன் மற்ற பல தி₃வ்ய க்₃ரந்த₂ங்களோடு இந்நூலையும் தனது கஜேந்திராழ்வானின் மீது அமர்த்தி, ஸ்தோத்ரபாட₂ கோ₃ஷ்டி₂யுடன் சித்திரைவீதியை வலம்வரச்செய்து பெருமைப்படுத்தியருளினான்.

உண்மையில் இவ்வியாக்கியானத்தை அடியேனை எழுதுகோலாகக்கொண்டு, அத்திருவரங்கராஜனே எழுதி வருகிறான் என்பதை அடியேன் மாதந்தோறும் அநுப4வித்து வருகிறேன். கீ3தாசார்யனான அத்திருவரங்கராஜனுக்கும், அந்த கீ3தையின் செம்பொருளைத் தமது தி3வ்யக்3ரந்த2ங்களிலே அருளிச்செய்த ஆழ்வார்களுக்கும், கீ3தார்த்த2 ஸங்க்3ரஹம் அருளிய ஆளவந்தார், கீ3தாசரமச்லோகார்த்த2த்தை எம்பெருமானார்க்கு உபதே3சித்தருளிய திருக்கோட்டியூர் நம்பிகள், கீ3தாபா4ஷ்யகாரர், பெரியவாச்சான் பிள்ளை முதலான தி3வ்யப்ரப3ந்த4 வ்யாக்2யாதாக்கள், பிள்ளையுலகாசிரியர், மாமுனிகள் முதலிய ரஹஸ்ய வ்யாக்2யாதாக்கள், கீ3தாபா4ஷ்ய டீகையருளிய ஸ்ரீ வேதா3ந்த தே3சிகர், ப4க3வத்கீ3தை வெண்பாவை அருளிய வாதிகேஸரி ஜீயர் முதலான ஆசார்யர்களுக்கும், கீ3தாபா4ஷ்யத்தை அடியேனுக்குக் காலக்ஷேபம் ஸாதித்துப் பிறகு துரீயாச்ரமத்தை அலங்கரித்த (கீர்த்திமூர்த்தி) ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி3 (திருமலை நச்சம்பாடி) திருவேங்கட ராமாநுஜஜீயர் ஸ்வாமிக்கும், தாத்பர்யசந்த்3ரிகையை அடியேனுக்குக் காலக்ஷேபம் ஸாதித்துவரும் ந்யாயவேதா3ந்த வித்3வத்3வரிஷ்ட2ரான கோழியாலம் ரங்க3நாதா2சார்ய ஸ்வாமிக்கும், இந்த கீ3தாவ்யாக்2யானத்திற்கு மிகவழகிய முகவுரை அருளியவராய், வாக்3மிருதவர்ஷீ, அத்4யாத்ம தத்வபோ3த4பா4ஸ்கரர் முதலான பல விருதுகளால் அலங்கரிக்கப்பெற்றவராய், உலகம் நிறைந்த புகழாளராய், உப4யவேதா3ந்த வித்3வத்3வரிஷ்ட2ரான வேளுக்குடி வரதா3சார்ய ஸ்வாமிக்கும், மற்றும கீ3தார்த்த2த்தைத் தமது பல நூல்களில் விவரித்து உபகரித்திருக்கும் பற்பல மஹநீயர்களுக்கும் அடியேனது க்ருதஜ்ஞதையைத் தெரிவித்து, இந்நூலின் மேலிரண்டு ஷட்கங்களும் அவ்வனைவரது பரிபூர்ணாநுக்3ரஹத்தால் நிறைவுபெறவேண்டும் என்று அவர்களது திருவடிகளில் இறைஞ்சி நிற்கின்றேன்.

இங்ஙனம்,

ப்ரமாதீச
சித்திரை ரேவதி
(1—5—73)

ஸ்ரீ வைஷ்ணவ தா3ஸாநுதா3ஸன்,
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸுத3ர்சனம்' ஆசிரியர்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்த

# பகவத்கீதை வெண்பா

[பதவுரையாசிரியர்:—'ஸுதர்சனம்' ஆசிரியர்]

## பாயிரம்.

1. கண்ணாநீ பார்த்தற்குக் காத்தற் கினிதுரைத்த
திண்ணார் திறமருளுஞ் சீர்கீதை யெண்ணாரு
நன்பொருளை யெங்கட்கு நாதா வருளுதலாற்
புன்பொருளிற் போகா புலன்.

எங்கட்கு நாதா! கண்ணா!—*எங்களுடைய ஸ்வாமியான கண்ணனே!* காத்தற்கு—*(எல்லாச் சேதனரையும்) ரக்ஷிப்பதற்காக.* நீ—*(ஸர்வேச்வரனை) நீ.* பார்த்தற்கு—*அர்ஜுனனுக்கு.* இனிது உரைத்த—*அழகாக அருளிச்செய்த.* திண்ணார் திறம் அருளும்—*உறுதியான உபாயங்களை உரைக்கும்.* சீர் கீதை—*அழகிய கீதையினுடைய.* எண்ணாரும் நன்பொருளை—*மதிக்கத்தக்க நல்லபொருளை.* அருளுதலால்—*தெரியவைத்த*

---

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸுதர்சன பத்ராதிபனான
ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமிதாஸன் இயற்றிய

# கீதார்த்த விவரணம்

नत्वा यतिपतिमनघं वैराग्यज्ञानभक्तिसंपन्नम् ।
व्याख्यां करोमि हृद्यां गीताशास्त्रस्य सुमनसां तृप्त्यै ॥

*[குற்றமற்றவரும், வைராக்யம், ஞானம், பக்தி முதலான செல்வங்கள் நிறைந்தவருமான எம்பெருமானாரை வணங்கி,*

லால், புலன்—(எங்களுடைய) ஐந்து [illegible] புன் பொருளில்–(சப்தம் முதலான) தாழ்ந்த [illegible] போகா - செல்லமாட்டா. 1.

2. மாதவனு மாமாது மாறனும்வண் பூதூர்வாழ்
போதமுனி யுந்தந்தம் பொன்னடிகள்—மீதருள
வுச்சிமேற் கொண்டே யுயர்கீதை மெய்ப்பொருளை
நச்சிமேற் கொண்டுரைப்பன் நான்.

மாதவனும்—லக்ஷ்மீநாதனும், மா மாதும் [illegible] யும், மாறனும்—நம்மாழ்வாரும், வண் பூதூர் வாழ் போத முனியும்—வண்மைமிக்க பெரும்பூதூரில் வாழ் [illegible] வடிவெடுத்த இராமாநுசமுனிவரும், தம் தம் பொன் அடிகள்—தங்தாமுடைய அழகிய திருவடிகளை, மீது அருள—(என் தலை)மீதுவைக்க, உச்சி மேல் கொண்டே—(அவற்றை) என் தலையுச்சியில் கொண்டே, உயர் கீதை மெய் பொருளை—உயர்ந்த கீதையின் உண்மைப்பொருளை, நான்—(பெரியவாச்சான்பிள்ளையின் அருள்நோக்குப்பெற்ற) நான், நச்சி - விரும்பி,' மேற்கொண்டு உரைப்பன்—விவரிப்பேன். 2.

3. நாத னருள்புரியு நற்கீதை யின்படியை
வேதம் வகுத்த வியன்முனிவன்—பூதலத்துப்
பாரதத்தே காட்டும் பதினெட்டோத் தும்பகர்வன்
சீர்தழைத்த வெண்பாத் தெரிந்து.

---

நன்னெஞ்சினையுடைய நல்லோர்கள் உகப்பதற்காக [illegible] சாஸ்திரத்திற்கு நெஞ்சிற்கினியதொரு வியாக்யானத்தை இயற்றுகிறேன்.]

## அவதாரிகை

பல்லாயிரம் வருஷங்களாக, பகவத்கீதைக்கு வடமொழியிலும் தென்மொழியிலும், பிறமொழிகளிலும் பல்லாயிரக் கணக்கான வியாக்கியானங்கள் எழுதப்பட்டுள்ளன. அவர்

நாதன்—எல்லாவற்றையும் நியமிப்பவனான கண்ணன், அருள் புரியும்—அருளிச்செய்யும், நற்கீதையின் படியை—சிறந்த கீதையின் வடிவத்தை, வேதம் வகுத்த வியன் முனிவன்—வேதத்தைப் பிரித்த ஆச்சர்யசக்தியுடைய வியாசமுனிவர், பூதலத்து—இவ்வுலகிலே, பாரதத்தே காட்டும்—மஹாபாரதத்திலே காட்டுகிற, பதினெட்டு ஓத்தும்—பதினெட்டு அத்தியாயங்களையும், தெரிந்து—ஆராய்ந்து, சீர் தழைத்த வெண்பா—சீர்கள் பொருந்தியிருக்கும் வெண்பாக்களில், பகர்வன்—உரைப்பேனாக. 3.

4 வேதப் பொருளை விசயற்குத் தேர்மீது
போதப் புகன்ற புகழ்மாயன்—கீதைப்
பொருள்விரித்த பூதூர்மன் பொன்னருளால் வந்த
தெருள்விரிப்ப னந்தமிழாற் றேர்ந்து.

விசயற்கு —அர்ஜுனனுக்கு, தேர்மீது—இரதத்தட்டின்மீது இருந்துகொண்டு, வேதப்பொருளை—வேதத்தின் பொருளை, போத புகன்ற தெரியும்படியாகச் சொன்ன, புகழ் மாயன்—(எல்லாராலும்) புகழப்படும் கண்ணன் அருளிய, கீதைப்பொருள் விரித்த -கீதையின் பொருளை (பாஷ்யத்தின் மூலம்) விளக்கிய, பூதூர்மன்—ஸ்ரீபெரும்பூதூரில் அவதரித்த எம்பெருமானாருடைய, பொன் அருளால் வந்த—அழகிய அருளால உண்டான, தெருள்— அறிவுமயமான பாஷ்யத்தை, தேர்ந்து—ஆராய்ந்து, அம்தமிழால் அழகிய தமிழ்ப்பாடல்களாலே, விரிப்பன்—விளக்கிக்காட்டுவேன். 4.

5. தேயத்தோர் உய்யத் திருமால் அருள்கீதை
நேயத்தோ ரெண்ணெய் நிறைவித்துத்—தூய
தெருளாரால தேபெரிய தீபத்தை நெஞ்சி
லிருளாற வேற்றுகேன் யான்.

---

றில் காலத்தால் மறைந்தவைபோக எஞ்சியிருப்பவையே நூற்றுக்கணக்கில் உள்ளன. உலகம் முழுவதும் மதிக்கப் படும் இதுபோன்ற நூல் வேறொன்று உலகில் இல்லை

**திருமால் அருள் கீதை**—லக்ஷ்மீநாதனான கண்ணன் அருளிய கீதை விஷயமான, **நேயத்து ஓர் எண்ணெய் நிறைவித்து**—ஸ்நேஹமாகிற ஓர் எண்ணெயை நிறைய இட்டு. **தூய தெருள் நூல் அதே**—பரிசுத்தமான அறிவு நூலான அதையே நூலாகக்கொண்டு, **நெஞ்சில்**-மனத்தில், **இருள் நூற**—இருள் அழியும்படியும், **தேயத்தோர் உய்ய**—நாட்டிலுள்ளார் உஜ்ஜீவிக்கும்படியும், **பெரிய தீபத்தை**—(ஞானமயமான) பெரிய விளக்கை, **யான்**—நான், **ஏற்றுகேன்** ஏற்றுகின்றேன். 5.

**6. சுத்தியார் நெஞ்சிற்றந் தொல்கரும ஞானத்தா**
**லத்தியா தொன்றை யறந்துறந்தோர்—பத்தியா**
**னண்ணும் பரமனு நாரணனே நற்கீதைக்**
**கெண்ணும் பொருளா மிசைந்து.**

**தொல் கரும ஞானத்தால்**—பழைமையான உபாயங்களான கர்மயோகத்தாலும் ஞானயோகத்தாலும், **சுத்தி ஆர் தம் நெஞ்சில்**—பரிசுத்தியடைந்த தம் நெஞ்சில், **ஒன்றை அ(ர்)த்தியாது**—(பகவத் கைங்கர்யம்தவிர) வேறொன்றை விரும்பாது, **அறத்துறந்தோர்**—மிகவும் வைராக்யமுடையவர்கள், **பத்தியால்**-(முற்கூறிய கர்மஜ்ஞாநவைராக்யங்களாலே உண்டான) பக்தியோகத்தாலே, **நண்ணும்**—அடையும், **பரமன்**—பரப்ரஹ்மமாகிற, **நாரணனே**—நாராயணனே, **நற்**

---

யென்றே கூறலாம். இதற்கமைந்த வியாக்கியானங்களிலும் பகவத்ராமாநுஜ பாஷ்யத்தைப்போன்றதொரு உரை இல்லை யென்பதே நடுநிலைநிற்கும் அறிவாளிகளின் துணிபு. அந்த பாஷ்யத்தைத் தழுவித் தமிழிலே வியாக்கியானமெழுதத் துணிகின்றேன். பெரியோர்கள் குற்றம் நீக்கிக்கொணர் கொள்வார்களாக.

"கர்மம் ஜ்ஞாநம் பக்தி முதலான உபாயங்களால் அடை யப்படும் பரம்பொருள்நாராயணனே" என்பதே ஸ்ரீபகவத் கீதையின் திரண்ட பொருள். ஸ்ரீவேதாந்த தேசிகர், தம் கீதா பாஷ்ய தாத்பர்யசந்திரிகையின் கடைசியில் கீதைக்குப் பல் வேறு மதத்தைச்சேர்ந்த பல்லாயிரவர் வியாக்கியனம் செய்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

பகவத் யாமுநாசார்யர் அருளிய

# கீதார்த்த ஸங்க்ரஹம்

स्वधर्मज्ञानवैराग्यसाध्यभक्त्येकगोचरः ।
नारायणः परं ब्रह्म गीताशास्त्रे समीरितः ॥ १ ॥

*1. ஸ்வத₄ர்ம ஜ்ஞாந வைராக்₃ய*
*ஸாத்₄ய ப₄க்த்யேக கோ₃சர: ।*
*நாராயண: பரம் ப்₃ரஹ்ம*
*கீ₃தாஶாஸ்த்ரே ஸமீரித: ॥*

**ஸ்வத₄ர்ம ஜ்ஞாநவைராக்₃யஸாத்₄ய ப₄க்த்யேக கோ₃சர:**- *தன் (வர்ணாச்ரம) கர்மரூபமாயிருக்கும் கர்மயோகத்தாலும், ஞானயோகத்தாலும், இதரவிஷயங்களில் பற்றின்மையாலும் உண்டாகும் பக்தியொன்றுக்கே விஷயமாகுமவனாய்,* **பரம் ப்₃ரஹ்ம**—*பரப்ரஹ்மமான,* **நாராயண:**—*நாராயணன்,* **கீ₃தாஶாஸ்த்ரே**—*கீதையாகிற சாஸ்திரத்தில்,* **ஸமீரித:**—*அறிவிக்கப்பட்டுள்ளான்.*

---

**கீதைக்கு**—*மிகச்சிறந்த பகவத்கீதைக்கு,* **இசைந்து**—*(அறிவாளிகள் அனைவரும்) அங்கீகரித்து,* **எண்ணும் பொருளாம்**—*நினைக்கும் பொருளாவான்.* 6.

[இப்பாசுரம் மேலே காட்டப்பட்ட கீதார்த்தஸங்க்ரஹம் முதல் ச்லோகத்தின் மொழிபெயர்ப்பாகும்.]

**7. ஞானங் கரும நலஞ்சேர் நிலையதனை**
**யான மனயோகத் தாராய்ந்திங்—கூனமறத்**
**தன்னா ருயிருணரும் தன்மையினை நற்கீதை**
**முன்னாரோத் தோதும் முயன்று.**

---

*திருப்பதையும் அவர்கள் எல்லோரும் இவ்வொரு விஷயத்தில் ஒற்றுமைப்பட்டிருப்பதையும் காட்டினார். இப்போதுமுள்ள சங்கர பாஷ்யத்திலும் இவ்விஷயம் பலவிடங்களில் பேசப்பட்டிருப்பதை ஆங்காங்கு காட்டுவோம்.*

ज्ञानकर्मात्मिके निष्ठे योगलक्ष्ये सुसंस्कृते ।
आत्मानुभूतिसिद्ध्यर्थे पूर्वषट्केन चोदिते ॥ २ ॥

*2. ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே₂*
*யோக₃லக்ஷ்யே ஸுஸம்ஸ்க்ருதே |*
*ஆத்மாநுபூ₄தி ஸித்₃த்₄யர்த்₂தே₂*
*பூர்வஷட்கேந சோதி₃தே ||*

**ஸுஸம்ஸ்க்ருதே**—*(சேஷத்வஜ்ஞானம், பலாந்தரங்களில் பற்றின்மை முதலான புத்தியின் ஸம்ஸ்காரங்களாலே) நன்கு அலங்கரிக்கப்பட்ட,* **ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே₂**—*ஜ்ஞாந யோகமும், கர்மயோகமும்,* **யோக₃லக்ஷ்யே**—*(ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிற) யோகத்தை அடையும் பொருட்டும்,* **ஆத்மாநுபூ₄தி ஸித்₃த்₄யர்த்₂தே₂**—*(அதன்பிறகு) ஆத்மாநுபவத்தை அடையும் பொருட்டும்,* **பூர்வஷட்கேந**—*(கீதையின்) முதல் ஆறு அத்தியாயங்களாலும்,* **சோதி₃தே**—*விதிக்கப்பட்டன.*

---

**ஞானம் கரும நலம் சேர் நிலைதனை**—*ஞானயோகத்தையும், கர்மயோகத்தையும்,* **ஆன மனயோகத்து**—*(அவற்றின் காரியம்) ஆன மானஸ ஸாக்ஷாத்காரத்தின் பொருட்டும்,* **ஆராய்ந்து**—*எண்ணி அநுஷ்டித்து,* **இங்கு**—*இவ்வுலகில் பின்பு,* **ஊனம் அற**—*குறைவில்லாமல்,* **தன் ஆர் உயிர் உணரும் தன்மையினை**—*தன் ஆத்மாவை அநுபவிக்கும் தன்மையை,* **நற்கீதை**—*மிகச்சிறந்த கீதையின்,* **முன் ஆறு ஓத்து**—*முற்பட்ட ஆறு அத்தியாயங்கள்,* **முயன்று ஓதும்**—*உறுதியுடன் கூறும். [மேலே எடுக்கப்பட்ட கீதார்த்த ஸங்க்ரஹம் இரண்டாம் ச்லோகத்தின் மொழிபெயர்ப்பு இது.]*

---

*கீதையில் பதினெட்டு அத்தியாயங்கள் உள்ளன. அவற்றில் முதல் ஆறு அத்தியாயங்கள் பூர்வஷட்கம் என்றும், நடு ஆறு அத்தியாயங்கள் மத்₄யமஷட்கம் என்றும், கடைசி ஆறு ஷட்கங்கள் அந்திமஷட்கம் என்றும் கூறப்படுகின்றன. பூர்வஷட்கத்தில் சொல்லப்படுவதாவது:—பகவச் சேஷத்வஜ்ஞானம், பலாந்தரங்களில் பற்றின்மை*

